# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 5] குரோதி சித்திரை 1, 13—4—64 கிழமை இதழ். விலை – 10 காசுகள். [இதழ் 19




அப்பர் தரும் விருந்து

## என்னினும் இனியன்

அறிந்து, நமக்கு நாமே தீமைசெய்து கொள்வதில்லை. எனவே, நமக்கு நாம் நன்மையே செய்து கொள்வது போலவும், நமக்கு நன்மை செய்பவர் நம்மினும் யாருமில்லை என்று கருதுவதும் இயல்பு. ஆனாலும், அறியாமையின் காரணமாகச் சில நேரங்களில் நமக்கு நாமே தீமைசெய்து கொள்ளவும் கூடும். அப்போது, நம்மை எல்லாம் நல்வழிப்படுத்துகிறவன் ஒருவன் இருக்கின்றான். அவன் நம்மினும் இனியன். அவன் யார்? அவன்தான், நம் உள்ளே உயிர்ப்பாகி, இனிமை பயக்கும் பொருட்டு வெளியே சென்று, மீண்டும் நம் உள்ளே வந்து தங்கித் தண்ணருள் சுரக்கும் ஈசன்.

"என்னி லாரும் எனக்கினி யாரில்லை
என்னினும் இனியான் ஒருவன் உளன்
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர்க் கீசனே"

—அப்பரடிகள்

# எது பிழை எது சரி?

—சாமி பழனியப்பன்—

## காட்சி

"இன்று நான்கு காக்ஷிகள் நடைபெறும்" என்ற திரைப் பட விளம்பரங்களை நாம் சாதாரணமாகப்பார்க்கிறோம் காக்ஷி என்று பிழைபட எழுது வோர் பலர் இருக்கின்றனர்.

காண் என்பதன் அடிப் படையில் பிறந்ததே காட்சி என்பது. காண் என்பது பகுதி. சி என்பது தொழிற் பெயர் விகுதி. இரண்டும் இணையும்போது காக்ஷி என்று வராது—காட்சிஎன்று தான் வரும். இதுதான் சரி

## மாட்சி

"மாக்ஷிமை தங்கிய" என்று சிலர் எழுதுகின்றனர். மாண் என்ற சொல் சி என்ற விகுதி பெற்றுப் புணர்ந்தால் மாட்சி என்றுதான் வரும். மாட்சி என்றால் மாண்பு, சிறப்பு பெருமை என்று பொருள் படும். எனவே, மாக்ஷிஎன்று எழுதுவது தவறு. மாட்சி என்றுதான் எழுத வேண்டும்

## ஆட்சி

'அவர் வீட்டில் அவர் மனைவி தான் ஆக்ஷி நடத்து கிறாள்' என்று கூறுவோர்—எழுதுவோர் இருக்கத்தான் செய்கின்றனர். ஆள் என்ற சொல் சி என்ற தொழிற் பெயர் விகுதி பெற்றுவரும் போது ஆட்சி என்றுதான் வரும். எனவே, அவர் வீட்டில் அவர் மனைவிதான் ஆட்சி நடத்துகிறாள் என்பதே சரி யானது.

## சூழ்ச்சி

என்னைக் கவிழ்த்துவிட வேண்டுமென்று 'அவன் சூட்சி செய்தான்' என்று பலர் எழுதத்தான் செய்கின்றனர். சூழ் என்ற சொல்லின் அடிப் படையாகப் பிறந்தது சூழ்ச்சி என்பது. சூழ் பகுதி—சி. தொழிற்பெயர் விகுதி. இரண் டும் புணரும் போது சூழ்ச்சி என்றுதான் வரும். அதுதான் சரி.

## அவர்க்கு - அவற்கு

அவர்க்கு, அவற்கு என்ற இரண்டு சொற்களுக்கும் வெவ்வேறு பொருள்கள் உண்டு. எனினும், பலர் அந்த வேறுபாடு தெரியா மலேயே இவ்விரு சொற்களை யும் பயன்படுத்துகின்றனர். அவர்+கு=அவர்க்கு இச் சொல், அவருக்கு, அவர்கட்கு என்று பன்மைச் சுட்டில் வரும். அவன்+கு = அவற்கு இச்சொல் அவனுக்கு என்று ஒருமைச் சுட்டில் வரும்.

## தீன்

சாதாரணமாகப் பெருந் தீனி உண்பவரைப் பார்த்து, உனக்குத் தீனி போட்டுக் கட்டாது என்று பலர் சொல் லுவதைக் கேட்டிருக்கிறோம். தீனி என்பது மனித உண வல்ல-விலங்குகளின் உணவு. தீன் என்பது தான் உணவுப் பண்டத்தைக் குறிக்கும். எனவே, உனக்குத் தீன் போட்டுக் கட்டாது என்று கூறுவதுதான் சரியானது. தீன் என்ற சொல்லை எடுத் தாளுவதை விட உணவு, சாப் பாடு என்று குறித்தலே நல் லது. காரணம், தீன் என்பது வழக்கிறந்தமையேயாம்.

## அவர்கள்தாம்

அவர்கள்தான் இதற்குப் பொறுப்பேற்க வேண்டும் என்று குறிப்பது தவறு. அவர்கள் என்னும் படர்க் கைப் பன்மை தான் என் னும் ஒருமை விகுதியுடன் சேர்ந்து வராது. ஆதலின் அதற்குரிய பன்மை விகுதி யான 'தாம்' சேர்த்து 'அவர் கள் தாம்' என்றே எழுத வேண்டும்.

## ஞாயிறு தோறும்

'பிரதி ஞாயிறு தோறும் விடுமுறை' என்று பல கடை களில் எழுதிவைத்திருப் பதைப் பார்க்கிறோம். பிரதி. தோறும் என்ற இரு சொற் களையும் இவ்வாறு ஒருசேரப் பயன்படுத்தல் தவறு. எனவே, **பிரதி ஞாயிறு விடு முறை** என்றோ, **ஞாயிறு தோறும்' விடுமுறை** என்றோ தான் எழுதுதல் வேண்டும்.

## ஒருவன் ஒருத்தி

ஒருவள் வந்தாள் — என்று எழுதுவதும் பேசுவதும் இன்று பெருவழக்காகி விட் டது. ஒருவன் என்பது ஆண் பால். ஆணைக் குறிக்கும். அதுபோல, ஒருபெண்ணைக் குறிக்க ஒருவள் என்று எழுதுவதோ பேசுவதோ சரி யன்று. 'ஒருத்தி' என்று குறிப்பதுதான் சரி.

## வந்தது எது? வந்தவர் யார்?

சற்று முன்பு இங்கு வந்தது யார்? என்று கேட்கிறோமல் லவா? அது தவறு. வந்தது என்பது அஃறிணையைக் குறிக்கும். யார் என்பது உயர் திணையைக்குறிக்கும்.எனவே, சற்று முன்பு இங்கு வந்தது எது? என்றுதான் குறிக்க வேண்டும். உயர்திணையைக் குறிக்க வேண்டுமாயின், சற்று முன்பு இங்கு வந்தவர் யார்? என்று குறிக்க வேண் டும்.

(அடுத்த பக்கம் பார்க்க)

# வரலாற்றுப் போக்கில் வள்ளுவம்

[தவத்திரு அடிகளார் அவர்கள் திருச்சி தேவர்மன்றத்தில் ஆற்றிய 2-வது சமய இலக்கியத் தொடர்ச் சொற்பொழிவு]

இன்றையச் சமுதாய அமைப்பைப் பொறுத்தவரையிலே 'வரலாற்றுப் போக்கில் வள்ளுவர்' என்ன கருதுகிறார். நீண்ட நெடுங்காலமாக இந்த நாட்டில் உள்ள பல்வேறு சமயத்தினரும், இங்குள்ள எல்லா அரசியல்தரப்பினரும், பல்வேறு கொள்கைகளையும் தத்துவங்களையும் கொண்டவரும் ஏற்றுப்போற்றும் ஒரு பொது நூலாகத் திருக்குறள் திகழ்ந்தாலும், அது எல்லோருக்கும் வழக்கறிஞராக விளங்க முடியுமா? என்பதுதான் ஒரு பெரிய கேள்வி.

தூற்றுகிறவனும் திருவள்ளுவரை ஏற்றுக் கொள்ளுகிறான் — போற்றுகிறவனும் திருக்குறளை ஏற்றுக்கொள்ளுகிறான். சமுதாயத்திற்கு நலன் செய்கிறவனும் திருக்குறளை ஏற்றுக்கொள்ளுகிறான் - தீமை செய்கிறவனும் திருக்குறளை ஏற்றுக்கொள்ளுகிறான் என்று சொன்னால், இருதரப்பினருக்குமே திருவள்ளுவர் 'நல்ல பிள்ளை'யாக நடந்து கொள்ளுகிறார் என்று கூறிவிடமுடியுமா? ஒருபோதும் சொல்ல முடியாது.

மனித சமுதாயத்தில் ஏதோ ஒரு தவறு நடந்து கொண்டிருக்கிறது. எங்கோ ஒரு மூலையில் - சிந்தனையில் தொடர்ந்து தவறு நடந்துகொண்டிருக்கிறது. எல்லாவற்றையும் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ளுகிற பலவீனமான மனோபாவம் பலரிடம் அமைந்திருக்கிறது. அத்தகையவர்கள், மிகச்சிறந்த நூலாக - மக்கட் குலத்தை வாழ்வாங்கு வாழவைக்கும் மறையாக விளங்கும் திருக்குறளைத் தங்கட்குச் சாதகமாக மாற்றிக் கொள்ள முயல்கிறார்கள் - மாற்றிக் கொள்கிறார்கள். அது நீதியுமாகாது - நேர்மையுமாகாது என்று காட்டுவது நமது பொறுப்பும் கடமையுமாகும்.

வரலாற்றுப் போக்கில் வள்ளுவம் என்று நாம் சொல்லுகின்றபோது, நிறையக் கருத்துக்களைக் கூறமுடியும், ஒரு கவிஞன் அல்லது ஒரு புலவன், அல்லது ஓர் எழுத்தாளன் சிந்தித்து ஒரு சிந்தனையைப் படைக்கவேண்டிய அவசியம் ஏன் ஏற்படுகிறது என்பதை நாம் முதலில் ஆராயவேண்டும். வெறும் புலமையினாலே மட்டும் ஓர் இலக்கியம் தோன்றினால் அதை வியந்து போற்றமுடியாது. வெறும் பக்தியினாலே - பாசத்தினாலே ஓர் இலக்கியம் தோன்றினாலும் அதை வியந்து பாராட்டமுடியாது. கவிதை

---

எது பிழை?

எது சரி?

## வலமும் இடமும்

வீட்டிற்கு வலது பக்கத்தில் ஒரு சிற்றோடையும். இடது பக்கத்தில் ஒருமாந்தோப்பும் இருக்கின்றன என்று எழுதுகிறோமல்லவா? அது சரியன்று. வலம் இடம் என்ற சொற்கள் வலது இடது என்று ஆகமாட்டா. ஆதலின், வலப்பக்கம், இடப்பக்கம் அல்லதுவலப்புறம், இடப்புறம் என்று எழுதுதலேசரி.

## தேநீர்

மாலை 4 மணிக்குத் தேனீர் விருந்து நடைபெறும் என்று எழுதுகிறோமல்லவா? தேனீர் என்றால் தேன் போன்ற நீர் என்றுதான் பொருள்படும். எனவே டீ (Tea) தேநீர் என்பதைக் குறிக்க தேநீர் என்றே எழுத வேண்டும். இங்கு தே என்பது முதலாகு பெயராகத் தேயிலையைக் குறிக்கும்.

## நந்நாடும்-நன்னாடும்

நந்நாடு, நன்னாடு என்ற இரு சொற்களும் ஒன்று போலச் சிலரால் எடுத்தாளப் பெறினும் இரண்டிற்கும் பொருள் மாறுபாடுண்டு நம்+நாடு, நந்நாடு என்றாகும், இது நமது நாடு என்று பொருள் படும் நன்மை+நாடு =நன்னாடு என்றாகும் இது நல்ல நாடு என்று பொருள படும்.

## பொருப்பு-பொறுப்பு

பொருப்பு, பொறுப்பு என்ற இருவேறு சொற்களுக்கும் மாறுபட்ட பொருள் உண்டு. எனினும், பலர் அந்த மாறுபாடு தெரியாமலேயே பயன் படுத்தி வருகின்றனர்.

## எது பிழை? எது சரி?

பொருப்பு என்பது மலையைக் குறிக்கும்-பொறுப்பு என்பது Responsibllityயைக் குறிக்கும். எங்கள்மலை. எங்கள் பொருப்பு என்றால் எங்கள் மலை. எங்கள் பொறுப்பு என்பது எங்கள் பொறுப்புணர்ச்சி என்று பொருள்படும்.

### புரம்-புறம்

புரம், புறம் என்ற இரு வேறு சொற்களும் ஒரே பொருளுடையன என்று கருதிப் பலர் பயன்படுத்தி வருகின்றனர். புரம் என்பது பக்கத்தைக் குறிக்கும் 'மேற்புரம்' என்பது மேற்புறத்தேயுள்ள ஊரைக் குறிக்கும். மேற்புறம் என்பது மேற்பக்கத்தைக் குறிக்கும்.

### முயன்றேன்

'இந்தக் காரியத்தில் நாம் தோல்வி கண்டுவிடக்கூடாதே என்பதற்காக என்னால் இயன்ற அளவிற்கு முயற்சித்தேன்' என்று பலர் சாதாரணமாக எழுதுகின்றனர். முயல்' என்பதன் அடிப்படையாகப் பிறந்த சொல் அது. முயல் என்பது சி என்ற தொழிற்பெயர் விகுதி பெற்று முயற்சி என்றாயிற்று. முயற்சி என்ற இச்சொல்லை முயர்ச்சி என்றும், முயற்ச்சி என்றும் எழுதுவோர் பலர் இருக்கின்றனர். இவ்வாறு எழுதுதல் தவறு. முயற்சித்தேன் என்று எழுதுவதும்சரியன்று. முயல் என்ற பகுதியுடன் காலங்காட்டும் இடைநிலையும் ஏற்ற விகுதியும் சேர்ந்து உண்டாகும் முயன்றான்-முயல்கிறான் - முயல்வான்—என்பன போன்று வருவனவே சரி.

(வளரும்)

# மனித சமுதாயத்தின் குறைகளை நீக்கிச் செழுமைப் படுத்தும் சமாதானம் இலக்கியம்

படைக்கும் ஆற்றலினால் மட்டும் ஓர் இலக்கியம் தோன்றுமானால் அதையும் நாம் கையேந்தி வரவேற்க முடியாது. அந்தப் புலவன் - பக்தன் - கவிஞன் - எழுத்தாளன் வாழ்ந்த காலச் சமுதாயத்தின் நடைமுறைகளை ஆழமாக - தெளிவாகப் புரிந்துகொண்டு - அந்தச் சமுதாயத்திலே - நடைமுறையில் இருந்த தவறுகளை - குறைகளை எண்ணிப் பார்த்து அந்தத் தவறுகளைமாற்றி - குறைகளைக் குறைத்து நிறையுடைய செழுமையை உருவாக்கும் முயற்சியை மேற்கொள்ளவேண்டும். அதற்குப பயன்படும் - அவன் பயன்படுத்தும் சாதனமே இலக்கியம் என்பதனை நாம் மறந்துவிடக்கூடாது.

நடைமுறையில் இருப்பதை எடுத்துக்காட்டுவதினால் மட்டும் இலக்கியம் சிறந்துவிடாது. கண்முன்னே காணபவற்றைக் கோவையாக எடுத்து விளக்குவது நிறைவான இலக்கியமன்று. வெறும் பொழுது போக்கிற்காக - புல்லிய உணர்ச்சிகளையும் - ஆசாபாசங்களையும் வளர்ப்பதற்காகப் படைக்கப் பெறுவனவற்றை இலக்கியங்களாக ஏற்றுக் கொள்வதற்கில்லை. தான் வாழும் தலைமுறையில் - மனித சமுதாயம் எந்தமுறையில் வாழ்கிறது - அந்தச் சமுதாயத்தின் உணர்ச்சிகளும் போக்குகளும் எப்படி இருக்கின்றன? அவற்றில் உள்ள குறை என்ன? நிறை என்ன? என்பனவற்றையெல்லாம் தெளிவாகப் புரிந்துகொண்டு இலக்கியங்களைப் படைப்பவனே இலக்கியகர்த்தா - எழுத்தாளன் - கவிஞன். அவன் அவற்றைப் புரிந்து கொள்வது மட்டும் போதாது - அவ்வாறு சிந்தித்து உணர்ந்ததை - புரிந்து கொண்டதை மனித உலகமே கூடி எதிர்த்தாலும் குறையைச் சுட்டிக்காட்டி, குறை நீங்கி மனித சமுதாயம் நிறைவை நோக்கி நடைபோடுதற்கான வழிமுறைகளை அஞ்சாமல் எடுத்துக்காட்டுபவனே சிறந்த கவிஞன் - சிறந்த இலக்கியப் படைப்பாளன். இவற்றை நினைவில் வைத்துக்கொண்டு, 'வரலாற்றுப் போக்கில் வள்ளுவம்' என்கிறபோது, திருவள்ளுவர் வாழ்ந்த காலம். அவருக்கு முன்னர் வாழ்ந்த மூத்த தலைமுறை - அன்றையச் சமுதாயம் எப்படியிருந்தது என்ற பின்னணிகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்க்கவேண்டும். என்னைப்பொறுத்தவரை நான், திருக்குறளை - வள்ளுவத்தை ஓர் உயர்ந்த ஒழுக்க நூலாகமட்டும் பார்க்கவில்லை. திருவள்ளுவர், தான் வாழ்ந்த காலத்துச் சமுதாய அமைப்பையும், தனக்கு முந்திய காலத்துச் சமுதாய அமைப்பையும், அந்தச் சமுதாயத்தில் நிலவிய ஏற்றத்தாழ்வுகளையும், மேடுபள்ளங்களையும் நன்றாகப் புரிந்துகொண்டு. தாழ்வுகளை நீக்கி ஏற்றங்காணவும். பள்ளங்களை நிரப்பி மேடுகளாக்கவும் திட்டமிட்டுத்தான் திருக்குறளைச் செய்தார். இதிலே நான் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறேன். வள்ளுவர் வாழ்ந்த காலத்திய மனித சமுதாயம் மேடு பள்ளங்களையுடையதாகவே இருந்தது. ஆம். மேடுகள்

(9ஆம் பக்கம் பார்க்க)

# சிந்தனையால் பெறும் அறிவு ஊற்றுநீர்போல— படிப்பால் பெறும் அறிவு மழைநீர் போல

## —சண்முகநாதபுரத்தில் தவத்திரு அடிகளார் அவர்கள்—

"சிந்தனையால் பெறும் அறிவு ஊற்று நீர்போல வற்ருமல் சுரந்து கொண்டிருக்கும். படிப்பால் பெறும் அறிவு மழை நீர்போல, மழை பெய்தால் நிலம் நனையும், எனினும் நிலத்தில் ஈரம் இருந்து கொண்டேயிருக்காது. எனவே. ஊற்றுநீர் போன்ற சிந்தனையறிவு நமக்குத் தேவை"

—என்று 2-4-64ல் சண்முகநாதபுரத்தில் நடைபெற்ற S. R. M. உயர்நிலைப்பள்ளியின் புதிய கட்டிடத் திறப்பு விழாவில் தவத்திரு அடிகளார் அவர்கள் குறிப்பிட்டார்கள். மேற்படி பள்ளியின் புதிய கட்டிடத் திறப்பு விழாவும், முதலாவது ஆண்டு நிறைவு விழாவும் சட்டமன்ற உறுப்பினர், திரு. சா. கணேசன் தலைமையில் நடைபெற்றன. தலைமை ஆசிரியர் கவிஞர் சோமசுந்தரம் அனைவரையும் வரவேற்று, பள்ளியின் ஆண்டறிக்கையைப் படித்தார். திரு. எஸ். ஆர். எம். எஸ். சாத்தப்ப செட்டியார் வாழ்த்துரை வழங்கினுர்.

பள்ளியின் ஆண்டு மலரை தவத்திரு அடிகளார் அவர்கள் வெளியிட்டுப் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

இயற்கையறிவும் சிந்தனையறிவும் மேலோங்க வேண்டும். படிப்பின் மூலம் கிடைக்கும் அறிவைவிட இயற்கை அறிவு பலமடங்கு சிறந்தது. மாணவர்கட்குப் படிப்பறிவும் தேவை. சிந்தனை அறிவும் தேவை.

சாதாரணமாக ஒரு பள்ளியைத் திறக்கிறவன் ஒன்பது சிறைச்சாலைகளை மூடவும் முடியும்; ஒன்பது கோயில்களைக் கட்டவும் முடியும். கோயிலைக் கட்டுவதைவிட கோயில் கட்டும் ஆற்றலை மக்கட்குக் கொடுத்து விட்டால் அவர்கள் பல்வேறு கோயில்களைக் கட்டுவார்கள். பொதுவாக, அறநிலையங்களுக்கு பெரும் பொருள் மூலதனமாக இருப்பதைவிட சில ஆயிரம் மக்கள் இருப்பது சிறப்புடையது என்ற கருத்துடையவன் நான்.

மனிதன் புற இயல் வளர்ச்சி, பொருளியல் முயற்சி, கால இயல் வளர்ச்சி ஆகியவற்றிற்கேற்பத் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டும். மனித வாழ்க்கைதான் வரலாற்றின் கருப்பொருள். எனவே, நாம் வரலாறுகளைப் படிப்பதோடு அமைந்துவிடாமல் வரலாற்றில் வருகிற பல நல்ல பாத்திரங்களைப் போல நம்மையும் நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் இளந் தலைமுறையினருக்கு வரவேண்டும்.

நாம் பெறுகிற படிப்பு. கல்வி, அறிவு, பண்பாடு அனைத்தும் ஒழுக்கத்திற்காகத்தான். எனவே, ஒழுக்க நெறியை நாம் பேணிக் காக்க வேண்டும்.

பின்னர், திரு. கண. சிற்சபேசன் பேசினுர். தமிழக செய்தித்துறை அமைச்சர் மேதகு கோ. பூவராகவன் அவர்கள் பள்ளியின் புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தார். இராமநாதபுர மாவட்ட கிழக்குப்பகுதி கல்வி அதிகாரி திரு. இராம நாட்ராயன் மாணவ மாணவியர்க்குப் பரிசுகள் வழங்கினுர், புலவர் பூமிநாதன் நன்றி நவின்ருர்.

பின்னர் பள்ளி மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சிகளும், நாடகங்களும் நடைபெற்றன.

### உறவுக் குடும்பங்களில் பெண் எடுப்பது ஏன்?

உறவுள்ள குடும்பங்களில் பெண் எடுப்பதும் கொடுப்பதும் ஒருவரையொருவர் நன்ருகப் புரிந்து கொண்டிருப்பார்கள் என்பதற்காகத்தான். ஒருவரையொருவர் புரிந்து கொண்டு நடத்துகிற வாழ்க்கையே சிறப்பான வாழ்க்கையாகத் திகழும்.

—அடிகளார்

## மனித வாழ்க்கையே வரலாற்றின் கருப்பொருள்

# தமிழகம்

அன்பாலே மக்கள்நலம் இணைந்து வாழும்
அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 5] 13—4—64 [ இதழ் 19

## வறுமை நீங்க வளமை பொங்க

இந்தியக் குடியரசு சுதந்திரம் பெற்ற நாள் தொட்டு இந்தியக் குடிமக்களின் பெரும்பான்மையோராக விளங்கும் கிராமத்து மக்களின் வாழ்க்கைத் தரம் உயரத் திட்டம் தீட்டியது-செயல் படுத்தவும் முற்பட்டது. இதன் விளைவே சமுதாய நலத் திட்டங்களும் பஞ்சாயத்து ஆட்சி முறையும். ஆனாலும், சமுதாய நலத் திட்டத் துறை அமைச்சர் மேதகு எஸ். கே. டே அவர்கள் நமது பாராளு மன்றத்தில் அறிவித்திருப்பதுபோல. திட்டங்களின் பயன் கிராம மக்களின் வாழ்க்கைத் தர உயர்வு நாம் எதிர்பார்த்தபடி இல்லை என்பது உண்மை. வளர்ச்சி இன்மைக்குக் காரணம் திட்டங்களில் உள்ள குறையல்ல-திட்டங்களைச் செயல் படுத்துவதில் உள்ள குறைகளேயாகும். உதாரணமாக, கிராம மட்டத்தில் கிராம சமுதாய அமைப்பினுடைய புனரமைப்பு வேலையில் பொறுப்புடையது பஞ்சாயத்துடையது. இந்தப் பஞ்சாயத்து சபைகள் பல, பெயரளவில் வரிவாங்கும் ஓர் இயந்திரமாகவே இருந்து கொண்டிருக்கின்றன. இந்தப் பஞ்சாயத்து சபைகளை ஒழுங்கு படுத்தப் பெற்ற முறையில் செயல்படுத்த அரசு போதிய முயற்சி எடுத்துக்கொள்வதில்லை,

மற்ற மாநிலங்களைப் போல தமிழக அரசு கிராமசபை அமைக்க முன்வரவில்லை. கிராமப் பஞ்சாயத்துக்கள் கிராம கூட்டுக் குடும்ப உணர்ச்சியை உண்டாக்கக் கூடிய தகுதியும் தரமும் படைத்ததாக இருத்தல் வேண்டும். பஞ்சாயத்து சபையின் அங்கத்தினர்கள் தொகையை இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தலாம். ஆண்டு தோறும் பஞ்சாயத்துக்களின் நடைமுறையைப் பரிசிலனை செய்து, வேலை திருப்தியில்லாத பஞ்சாயத்துக்காகப் புதுப்பிக்க வேண்டும்.

பஞ்சாயத்துத் தலைவரை ஆண்டு தோறும் தேர்ந்தெடுக்கும் முறை நல்லது. பஞ்சாயத்துக்களை வேலைகளில் ஊக்கப் படுத்தி நெறிப்படுத்த தனி அலுவலர்கள் வேண்டும். மேலும், கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு அரசின் மானியத் தொகையோடு தகவல் தெரிந்த ஓர் அலுவலர் நியமிக்கப் பெற வேண்டும். அச் செலவில் பாதியை பஞ்சாயத்தும் மீதியை அரசாங்கமும் ஏற்க வேண்டும். ஐந்தாண்டுகளில் படிப்படியாகப் பஞ்சாயத்தே அச்செலவை முழுவதுமாக ஏற்க வேண்டும்.

கிராம வளர்ச்சியில் அடுத்து முக்கியமான பங்கு வகிப்பது கூட்டுறவு இயக்கம். சுதந்திரத்திற்குப் பிறகு, கூட்டுறவுத் துறையில் கணிசமான முன்னேற்றம் காணப்படினும் நாட்டின் தேவைக் கேற்றவாறு வளர்ச்சியடைய வில்லை.

உற்பத்தியாளர்கள் தங்களுக்குள் கூட்டுறவு முறையில் அமைப்பு அமைத்துக் கொண்டு தங்கள் உற்பத்திப் பொருள்களை விற்பனைக்குக் கொண்டுபோகும் வழக்கம் கணிசமாக வளர வில்லை, ஆதலால், உணவு உற்பத்தியாளர்களாயுள்ள விவசாயிகளின் வாழ்க்கைத்தரம் உயரவில்லை. மாறாக, மொத்த வியாபாரிகளின் வாழ்க்கைத்தரம் கணிசமாக உயர்ந்திருக்கிறது. கிராமத் தொழில்கள் புத்துயிர் பெற வேண்டும் என்ற பேரார்வம் அரசுக்கு இருந்தாலும் நடைமுறையில் அது நடைபெறவில்லை. கிராமத் தொழில் வளர்ச்சிக் குழுக்கள் மாநில மட்டத்திலும் இந்திய மட்டத்திலும் இருந்தால் போதா. கிராம—தாலுகா—மாவட்ட வட்டத்

(8ஆம் பக்கம் பார்க்க)




# தீயினும் அஞ்சப்படும்

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறள் ஒரு முழுமுதல் நூல்—அறநூல் ஒழுக்க நூல். நல்லனவும் தீயனவும் காட்டி தீயனவற்றை விலக்கவும் நல்லன வற்றை மேற்கொள்ளவும் வழிகாட்டும் வாழ்க்கை மறை.

நன்மை கலந்த தீயனவும் உண்டு-தீயன கலந்த நல்லனவும் உண்டு. இவ்விரண்டும் விரவிக் கலந்து கிடக்கின்ற நன்மையால் யயனில்லை. வரிழ்வுக்கு உறுதியுமில்லை. தீயனவற்றிலிருந்து நன்மைகள் தோன்று-தோன்றவும் முடியா. தீயவை துன்பம் நிறைந்த தொல்லைகளையே தரும். தீயவையால் எப்போதும் எந்த அளவிலும் நன்மைகள் விளையா. தீயினால் நன்மையும் உண்டு. ஏன்? நன்மையே உண்டு, அதைப் பயன்படுத்துவோர் முறை தவறிப் பயன்படுத்தினாலொழிய, தீ ஒரோவழி அஞ்சத் தக்கதே யொழிய பல்லாற்றானும் பயன் கொள்ளத் தக்கது. தீயவையே எக்காலத்தும் துன்பத்தையே தரும்-ஒரோவழிகூட நன்மையைத் தாரா. மேலும், தீயினால் விளையும் கேட்டால் நாம் உடைமைகளையே இழக்கிறோம். ஆனால், தீயனவற்றால் உணர்வை இழக்கிறோம். தீ விபத்தால் அன்பு சிறப்பதுண்டு. தீயனவற்றால் பகைமையே தோன்றி வளரும்.

முயன்றால் பெருந்தீயையும் அவித்து விடலாம். தீமையைத் தவிர்ப்பது அத்துணை எளிதன்று. மேலும், யார் இட்ட தீயானாலும் தீயிட்டவர் தாம் அதனை அவிக்க வேண்டும் என்பதில்லை. மற்றவரும் அவிக்கலாம். ஆனால், தீயன எண்ணித் தீயன செய்தாரின் தீமையைப் பிறர் அழித்தற் கொண்ணாது தீயன செய்தாரே அழித்தல் வேண்டும். தீயினால் விளையும் தீமைகளினின்று நாம் தப்பித்துக் கொள்ள முடியும். தீயவற்றால் விளையும் கேடு, செய்தவனை மட்டுமன்று, செய்யப் படுகின்றவனையும் தாக்கி வருத்தும். அதனால், இரத்தமே நச்சுத்தன்மை அடைகிறது. கேடுகள் சூழ்கின்றன.

தீப்பட்ட இடத்தில் மீண்டும் வீடுகள் கட்டலாம். வயல்கள் உண்டாக்கலாம். ஆனால், தீயவழிப் பட்டவன் வாழ்க்கையில் நன்மையையே காணமுடியாது.

மேற்கூறிய பல்வேறு உண்மைகளையும் மனத்திற் கொண்டே திருவள்ளுவர், 'தீயன தீயினும் அஞ்சப்படும் என்றார். இதோ வள்ளுவர் கூறுகிறார், பாருங்கள்.

தீயவை தீய
பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்



-குறள்

# வாய்க்கால்களும் உழைப்பாளிகளும்

வருத்து வாய்க்கால்கள் மூலமே ஏரிக்குத் தண்ணீர் வரும் அந்த வருத்து வாய்க்கால்களைக் கோடையில் சரிவர மராமத்துச் செய்து வைத்திராவிட்டால் ஏரிக்குத் தண்ணீர் எப்படி வரும்? அதுபோல, உழைப்பாளர்கள் உழைப்பதன் மூலமே செல்வந்தர்களுக்குப் பணம் சேர்கிறது. செல்வந்தர்களுக்குப் பணம் வருவதற்கான வாய்க்காலாக விளங்கும் உழைப்பாளிகளைச் சரிவரப் பேணிக் காக்காவிட்டால் செல்வந்தர்களுக்கு எப்படிச் செல்வம் வந்து குவியும்?

# சமுதாயத்தின் மூளை

மூளை மிகவும் முக்கியமான உறுப்பு. ஆனாலும், அது தானே அள்ளிச் சாப்பிடுவதில்லை. பிற உறுப்புக்களும் முயன்று உழைத்து மூளையைக் காப்பாற்றுகின்றன. அதுபோல, வேதம் ஓதுகிறவர்களும், சமயக் கணக்கர்களும் சமுதாயத்திற்கு மூளை போன்றவர்கள். அவர்கள் தமது வாழ்க்கைப் பிரச்சனைகளில் ஈடுபடாமல் தத்தம் கடமைகளைச் செய்தால், பிற உறுப்புக்கள் மூளையைக் காப்பாற்றுவதுபோல, சமுதாயத்தின் மூளைபோன்ற அவர்களைச் சமுதாயம் காப்பாற்றும்!

—அடிகளார்.



(6ஆம் பக்கத் தொடர்ச்சி)

திலும் அத்தகைய குழுக்களை வைத்து காரியங்களைச் செய்ய ஊக்குவிக்கவேண்டும். கிராமம் முன்னேற கிராமத்தில் உள்ளவர்கட்கு உணர்ச்சியும் விழிப்பும் ஏற்படவேண்டும். டில்லியிலோ சென்னையிலோ மட்டும் உணர்ச்சி ஏற்பட்டால் போதாது.

சுதந்திரத்திற்குப் பிறகு நகரங்களின் வளர்ச்சி கட்டுக்கடங்காமல் போய்க் கொண்டிருக்கிறது. இவ்வளர்ச்சி நகரத்திற்கும் நல்லதன்று, நாட்டுக்கும் நல்லதன்று.

மக்கட் தொகை 2 இலட்சத்திற்கு உட்பட்டதாகவே நகரங்கள் அமையவேண்டும்; அந்நகரங்களை மையமாகக் கொண்டு பக்கத்து நகரங்களை - இணைக்கப்பெற்ற புதிய சிறிய நகரங்களைத் தோற்றுவிக்க வேண்டும். அப்பொழுதே கிராமங்கள் வலிவும் பொலிவும் பெறும்.

சீன ஆக்கிரமிப்புக் காலத்தில் சுறுசுறுப்பாக அமைக்கப்பெற்ற கிராமத் தொண்டர் படைகள் தொடக்கத்திலிருந்த ஆர்வத்தோடு தொடர்ந்து செயல்படவில்லை. இத்தொண்டர் படைகளை ஒழுங்குபடுத்திக் கிராம மட்டத்தில் பொதுப்பணிகளைச் செய்யச் சக்தியுடையதாக ஆக்க வேண்டும். அமைதி, ஒழுங்கு முறை கவனித்தல் ஆகிய பணிகளைச் செய்ய ஊர்க்காவல் படைக்கும் இணைப்புண்டாக்க வேண்டும். ஒவ்வொரு கிராமத்திலும் பல்வேறு அமைப்புக்களின் சார்பாளர்கள் அடங்கிய கூட்டுக் குழுக்களை நியமித்து, அவர்களிடத்தில் கிராமத்தில் பொதுவான வேலைகளை நிறை வேற்றும்படி பொறுப்புக் கொடுக்கலாம். குறிப்பாக, பஞ்சாயத்துத் தலைவர், கூட்டுறவு சங்கத் தலைவர், தொண்டர்படைத் தலைவர், பள்ளியின் தலைமை ஆசிரியர், அவ்வூரில் மருத்துவர் இருந்தால் மருத்துவர், போலிஸ் இன்ஸ்பெக்டர், கிராம அதிகாரிகள் ஆகியவர்களைக் கொண்ட கூட்டுக் குழு அமைக்கலாம். இக்குழு அமைக்கப் பெறுவதன் மூலம் அவர்களுக்குள் இருக்கிற போட்டாப் போட்டிகள் மறைந்து, இணைக்கப்பெற்ற முயற்சிகள் தோன்றும்.

சீரிய முறையில் சிந்தித்து, சிறந்த முறையில் சமுதாய நலத் திட்டத்தைச் செயல்படுத்தினாலன்றி நம் கிராமங்களை முன்னேற்ற முடியாது.

கிராம மக்களின் வாழ்க்கை முன்னேறாத வரையில் நாம் பெற்ற சுதந்திரத்திற்குப் பலனில்லை. அது மட்டுமின்றி, கடுமையான உள்நாட்டுப் புரட்சிகளும் ஏற்படக் கூடும். ஆதலால், கிராம மக்களின் முன்னேற்றத்திற்குரிய முயற்சிகளில் மிகவும் கடுமையாகவும் கவனமாகவும் ஈடுபட்டாக வேண்டும்.

— அடிகளார்

---

## குடந்தை புலவர் கழகச் சிறப்புக் கூட்டம்

குடந்தை, புலவர் கழகச் சிறப்புக் கூட்டம் 29-3-64ல் குடந்தை இராசேந்திரன் பேட்டை ஆதி கம்பட்ட விசுவநாதர் ஆலயச் சுற்றுமுற்றத்தில் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்து, 'வழிகாட்டும் வள்ளுவர்' என்பது பற்றி அரியதோர் உரையாற்றினார்கள்.

குடந்தை சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின் 28வது ஆண்டு நிறைவு விழா 29-3-64ல் சட்டமன்ற உறுப்பினர் திரு A. R இராமசாமி தலைமையில் நடைபெற்றது. குடந்தை நகர் மன்றத் தலைவர் திரு. என். காசிராமன் சன்மார்க்கக் கொடியேற்றி வைத்தார். மன்னார்குடி திரு. எம். கோபால்சாமி தென்கொண்டார், எம். பி. விழா வைத் தொடக்கி வைத்தார். போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு குடந்தை துணை நீதிபதி திரு. S. M. கமாலுதீன் பரிசு வழங்கினார்.

பின்னர் தவத்திரு அடிகளார் அவர்கள் பேசுகையில், புறத்துறுப்புக்களால் மனிதனுக்குப் பெருமையில்லை— அகத்துறுப்பான ஆன்மீக நலத்தால்தான் மனிதனுக்குப் பெருமை - மனிதன் உணர்ந்து தெளிந்து எவ்வுயிர்க்கும் அன்பு செய்து பயனுற வாழ வேண்டும்'' என்று குறிப்பிட்டார்கள்.

## இளையாத்தங்குடியில் வரவேற்பு

தவத்திரு அடிகளார் அவர்கள் சேவினிப்பட்டிக்குச் செல்லும் வழியில், இளையாத்தங்குடி அரிஜனங்கள் தவத்திரு அடிகளார் அவர்களுக்கு ஒரு வரவேற்பளித்தனர். அவ்வமயம் தங்கள் ஊரிலுள்ள குடிநீர் ஊரணி மராமத்து பற்றியும், அரிஜனங்கள் குடியிருக்கும் வீடுகள் மராமத்துப் பற்றியும் எடுத்துக் கூறி, உதவி செய்யுமாறு கேட்டுக் கொண்டனர். தவத்திரு அடிகளார் அவர்கள் தம்மால் இயன்றதைச் செய்வதாகக் கூறினார்கள்.

# மனித சமுதாயம் நிறைநோக்கி நடக்க வழிகாட்டுபவனே இலக்கியகர்த்தா

(4ஆம் பக்கத் தொடர்ச்சி)

குறைவாகவும், பள்ளங்கள் சற்று அதிகமாகவும் இருந்தன. அந்தப் பள்ளங்களை நிரப்பி, மனித ஒழுக்கநெறியில் அந்தச் சமுதாயத்தை ஈடேற்ற வேண்டும் - வழி நடத்திச் செல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் தான் திருவள்ளுவர் திருக்குறளைச் செய்தார்.

திருவள்ளுவர், மனிதசமுதாய வரலாற்றில் ஏற்பட்டிருந்த குறையை - வீழ்ச்சியை - ஒழுக்கக்கேடுகளைக் கண்டு பிடித்து, அவற்றை மாற்றியமைத்து ஏற்றமும் எழுச்சியும் உண்டாக்கிச் சமுதாயத்தை நல்வழியில் வழிநடத்திச் செல்லவேண்டும் என்ற தூய நன்னோக்கத்தோடு வள்ளுவத்தைச் செய்தார் - மனித குலச்சிந்தனையாளனாக - ஒழுக்க நெறியாளனாக - இவற்றிற்கெல்லாம் மேலாக, சமுதாயத் தலைமைக்குத் தகுதியுடையவனாகத்தன்னை ஆக்கிக்கொண்டு திருவள்ளுவர் திருக்குறளைச் செய்தார் என்ற உண்மையை - முன்னுரையை நாம் இங்கே நினைவில்வைத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு - அந்த முன்னுரையிலிருந்து நாம் சில செய்திகளைக் காணலாம்.

திருவள்ளுவர் காலத்தில் வாழ்ந்த மனித சமுதாயத்தில் எண்ணத் தொலையாத - ஏராளமான பிரிவினைகள் இருந்திருக்கின்றன. அந்தப் பிரிவினைகளின் காரணமாக - வேற்றுமைகளின் காரணமாக மனிதனே மனிதனைப் பகைக்கின்ற மிகக்கொடிய சூழல்வளர்ந்துவிட்டது. ஒருவருக்கொருவர் சிரித்துப்பேசி மகிழப்பிறந்த மனித குலம், குளிர்ந்த பார்வையால் ஒருவரோடொருவர் கூடி உறவாடப் பிறந்த மனிதகுலம் தனக்குள் பல்வேறு வேற்றுமைச் சுவர்களை எழுப்பிக்கொண்டது. மனித சமுதாயத்தில் இல்லாத பல்வேறு கற்பனைகளை உருவாக்கிக்கொண்டு எழுப்பிய பிரிவினையுணர்வுகளைத் திருவள்ளுவர் பார்த்தார். 'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்' என்றார், மனித குலத்தில் எத்துணை வேற்றுமையுணர்வுகள் இருந்தாலும், எவ்வளவு பிரிவினையுணர்வுகளைத் தோற்றுவித்தாலும் பிறப்பிலும் இறப்பிலும் வேறுபாடுண்டா? அப்படி வேறுபாடில்லாத உலகத்தை நீ ஏன் வேறுபடுத்துகிறாய்?— நீ ஏன் வேறுபாட்டுணர்வுகளை வளர்க்கிறாய்? என்றுகேட்பது போல திருவள்ளுவர் பேசுகிறார் —

'பிறப்பொக்கும் எல்லா
உயிர்க்கும் சிறப்பொவ்வாச்
செய்தொழில் வேற்றுமை யான்'

என்று குறிப்பிடுகிறார். இதைச் சொன்னதோடு திருவள்ளுவர் அமைந்துவிடவில்லை — அமைதிகொள்ள அவரால் முடியவில்லை. ஒழுக்கத்தைச் சார்பாக வைத்துக்கொண்டு இன்னாருக்கு இன்ன ஒழுக்கம் - இந்த ஒழுக்கமுடையவர் இன்ன சாதியினர் என்று கூறி அகத்தின் வழிப்பட்ட

## சர்வோதயக் கருத்தரங்கு

நான்குனேரி வட்டார சர்வோதய கருத்தரங்கும், சாந்தி சேனை பயிற்சி முகாமும ஏப்ரல் 2 3 நாட்களில் நான்குனேரி பஞ்சாயத்து யூனியன் உயர் துவக்கப் பள்ளியில் சிறப்பாக நடைபெற்றன. பயிற்சி முகாமை திரு. எஸ். ஆர். சுப்பிரமணியம் தொடங்கிவைத்தார். பயிற்சி முகாமின் நோக்கங்களை திரு. கே. எம். நடராசன் விளககினார் 'சமூகத்தில் பெண்கள்' என்பது பற்றி திருமதி எஸ். கிருஷ்ணம்மாள் ஜெகந்நாதன் பேசினார். கதரும் கிராமக் கைத் தொழில்களும் எனபது பற்றி திரு. டி. கௌரியும் கிராமதானம் பற்றி திரு. வி. பொன்னையாவும் பேசினர்.

களக்காடு வட்டாரத்தில் நடைபெற்ற கிராமதான பாத யாத்திரைக் குழுவினருடன் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். திரு. எஸ். ஆர். சுப்பிரமணியமும் கலந்துகொண்டார். திரு. எஸ். டி. தவசிக்கனி தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் திரு. எஸ். ஆர். சுப்பிரமணியமும், திருமதி கிருஷ்ணம்மாள் ஜெகந்நாதனும் சொற்பொழிவாற்றினார்கள். பின்னர், தவத்திரு அடிகளார் அவர்கள் சர்வோதய தத்துவங்களையும், கிராமதான கதர் சாந்தி வேலைத் திட்டங்களையும் விளக்கிஅரியதோர் உரையாற்றினார்கள்.

3-4-64ல் நான்குனேரி பெருமாள் சன்னதி முன்பு நடைபெற்ற சர்வோதயப் பொதுக் கூட்டத்தில் தவத்திரு அடிகளார் அவர்கள் சிறந்ததோர் உரையாற்றினார்கள்.



## உயர்குடிப் பிறப்பை அளக்கும் கருவி உயர்ந்த ஒழுக்கப் பண்புதான்

ஒழுக்கத்தை வரையறுத்துக் கொள்ளாமல் வெறும் புறச் சார்பான ஒழுக்கத்தையே பெரிதெனக் கருதி, வெளிநடை முறைகளை-புறச் செயல்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டு அவற்றின் வழி நால்வகைச் சாதிகளை உருவாக்கிவளர்த்து வைத்திருந்த சமுதாயப் போக்கையும் திருவள்ளுவர் பார்த்தார். அவ்வாறு, நால்வகைச் சாதிகளுக்குள் பெருஞ் சுவர் எழுப்பிக்கொண்டு மனிதகுலம் வாழ்ந்த கொடுமையைப் பார்த்தார். சாதிமுறைகளை ஏன் ஒழிக்கமுடியாது என்று கேட்டார்.

'ஒழுக்கம் உடைமை
குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்'

என்றார். ஆம். நீ யார் வீட்டிலே பிறந்தாய் என்பது முக்கியமன்று - நீ எந்தத் தெருவிலே வளர்ந்தாய் என்பது முக்கியமன்று - நீ எந்தத் தொழில் செய்யும் பரம்பரையில் தோன்றினாய் என்பது முக்கியமன்று. உன்னிடத்து, மனித குலத்தை வாழ்விக்கின்ற — அணைத்து மகிழ்கின்ற அகவொழுக்கம் இருக்கிறதா? அந்த அகவொழுக்கத்தைப் பெற்றவனே பெருங்குடி மகனாவான் - 'ஒழுக்கமுடைய குடிமை' என்று சொன்னார். உயர் குடிப்பிறப்பை அளக்கும் அளவுகோலே ஒழுக்கந்தான். பிறந்த வீடும், பேசும் மொழியும், கும்பிடும் கோயிலும், ஓதுகிற வேதமும் உயர் குடிப்பிறப்பை அளக்கும் அளவுகோல்கள் அல்ல என்று கருதினார். இவற்றையே அளவுகோலாகக் கருதிப் பெருமையும் சிறுமையும் பேசிய - கற்பித்த பேதைமையைச் சாடினார். மனித குலத்திலிருந்த சாதி இன வேற்றுமைகளை ஒழித்து மனிதகுலத்தை ஒருகுலமாக்குவதற்கென்றே திருவள்ளுவர் வள்ளுவத்தைச் செய்தார். திருவள்ளுவர் விரும்பிய வண்ணம் சாதி இன வேறுபாடுகளை ஒழித்துக் கட்டி, மனித குலத்தை ஒருகுலமாக்க திருவள்ளுவர் வலியுறுத்துவதுபோல நாம் ஒழுக்கத்தை வளர்க்கவேண்டும்.

ஒழுக்கத்தைத் தூண்டி வளர்ப்பன கல்வி, அறிவு, சிந்தனை ஆகியன. இந்த உண்மையையும் திருவள்ளுவர் மிகத்தெளிவாகப் புரிந்துகொண்டிருந்தார். தமது தவறான பழக்க வழக்கங்களைக் கூட நியாயமானவை என்று பிடிவாதம் பிடிக்கின்றவர் பலர் இருக்கின்றனர் என்பதையும் திருவள்ளுவர் நன்றாக உணர்ந்துகொண்டிருந்தார். மனிதனின் அகக்கண் குருடாகிப் போனதாலேயே அவன் தன்னுடைய வாழ்வியலைப்பற்றி – ஒழுக்க இயலைப்பற்றி - பழக்க வழக்கங்களைப்பற்றித் தானாகச் சிந்தித்துத் தன்னைச் செழுமைப்படுத்திக் கொள்ள முடியவில்லை. செழுமைப்படுத்திக் கொள்ளுகின்ற அளவிற்குக் கல்வியறிவு இல்லை என்று கண்டார். எனவே, சமுதாயம் முழுவதுக்குமாகக் கல்வி கொடுக்கவேண்டும் - சமுதாயத்தையே படிப்பிக்கவேண்டும் என்றார். எல்லோரும் படியுங்கள்! எல்லோரும் சிந்தனை செய்யுங்கள் என்றார். கல்வியின் இன்றியமையாமையை - கல்வியின் சிறப்பை மிகத் தெளிவாக எடுத்துக் கூறி வலியுறுத்துகிறார்.

(வளரும்)

# செய்திச் சுருள்

## திரிபுரந்தான் மாணவர் விழா

திரிபுரந்தான் மன்ற உயர் நிலைப்பள்ளி மாணவர் மன்ற ஆண்டுவிழா 30-3-64ல் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்து, 'வள்ளுவர் கண்ட நெறி' என்பது பற்றிச் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினர்கள்.

## தா. பழூர் இலக்கிய விழா

தா. பழூர் மாவட்ட மன்ற உயர்நிலைப்பள்ளி இலக்கிய மன்ற ஆண்டுவிழா 30-3-64 தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. 'நாடும் ஏடும்' என்ற தலைப்பில் தவத்திரு அடிகளார் அவர்கள் அரியதோர் உரை நிகழ்த்தினர்கள்.

## சிதம்பரத்தில் இலக்கிய விழா

சிதம்பரம் தவத்திரு ஆறுமுக நாவலர் உயர்நிலைப்பள்ளி இலக்கிய மன்ற ஆண்டு நிறைவு விழா 30-3-64ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

## இராமநாதன் செட்டியார் பள்ளிகளின் ஆண்டுவிழா

புதுவயல் இராமநாதன் செட்டியார் உயர்நிலைப்பள்ளி தொடக்கப்பள்ளி ஆகியவற்றின் முதலாவது ஆண்டு விழா கிழக்கு இராமநாதபுர மாவட்டக்கல்வி அதிகாரி திரு இராம. நாட்டராயன் தலைமையில் நடைபெற்றது. மிட்லண்ட் திரு. இராமநாதன் அவர்களையும் வரவேற்றுர்.

தவத்திரு அடிகளார் அவர்கள் வாழ்த்துரை வழங்குகையில் 'ஒவ்வொரு மனிதனையும் ஒவ்வொரு பதவிக்குத் தகுதியுடையவனாக ஆக்கினால் தான் உண்மையான-நியாயமான சோசலிச சமுதாயம் அமையும்' என்றும் சாதி ஒழிப்பிற்காகவும், தீண்டாமை ஒழிப்பிற்காகவும் நீண்டநாட்கள் போராடிய தின்பயனை இப்போது நாம் கல்வித் துறை மூலம் காண்கிறோம் என்றும் கூறினர்கள்.

## பாண்டுகுடி தமிழ் மறைக் கழக விழா

பாண்டுகுடித் தமிழ்மறைக் கழக முதலாவதாண்டு விழா 5-4-64ல் திருவாடானை ஊராட்சி மன்றத் தலைவர் திரு. ஆ. தே. மு. இராமநாதன் தலைமையில் நடைபெற்றது. கழகத் தலைவர் திரு. க. அ. சுப்பையா அவர்களையும் வரவேற்றுர். திரு. கோவிலங்குழலோன் அறிக்கை படித்தார். திரு. த. முத்துச்சாமி, திரு அறிவனுர் ஆகியோர் பேசினர். பின்னர், வண்டமிழ் மறையும் வாழ்வியலும் என்பது பற்றி அரியதோர் உரையாற்றினர்கள்,

## சேவினிப்பட்டி காந்திஜி வாசகசாலை

திருப்புத்தூர் தாலுகா சேவினிப்பட்டி கிராமத்தில் காந்திஜி வாசகசாலைக் கட்டடத்திற்கு 6-4-64ல் தவத்திரு அடிகளார் அவர்கள் கால்கோள் செய்தார்கள். திருப்புத்தூர் டிப்டி சேவக் திரு. கே. சந்திரசேகரன் அவர்களையும் வரவேற்றுர். ஆவினிப்பட்டி திரு. பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியார் கொடியேற்றி வைத்தார். தேவகோட்டை கோட்டாட்சித் தலைவர் திரு. எஸ். காளை பி. ஏ., திரு வி. கே, வெள்ளைச்சாமி ஆகியோர் திரு. மு. தமிழரசு ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## தி. சுக்காம்பட்டி மாணவர் விழா

தி. சுக்காம்பட்டி கழக உயர்நிலைப்பள்ளி மாணவர் இலக்கிய மன்ற ஆண்டுவிழா 6-4-64ல் திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. கே. சொக்கலிங்கம் தலைமையில் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் 'இலக்கியமும் சமுதாயமும்' என்ற பொருள் பற்றி விரிவுரையாற்றினர்கள்.

Registered No. M- 7827 THAMILAGAM. Weekly 13-4-64

# தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின்
## சமய, இலக்கிய தொடர்ச் சொற்பொழிவுகள்
## 6-வது சொற்பொழிவு

இடம்:- திருச்சி தமிழ்ச்சங்கக் கட்டிடத்தில்
தேதி:- 26—4—64 ஞாயிறு காலை 10மணி




"சிலம்பில் வரும் சில பாத்திரங்கள்"
எனுந்தலைப்பில் 'மாதவி' பற்றி

தவத்திரு அடிகளார் அவர்கள் பேருரை நிகழ்த்துவார்கள்.

அனைவரும் வருக!

திருச்சிநகர அருள்நெறித் திருக்கூட்டம்
திருச்சிராப்பள்ளி.

## அடிகளார் அருளிய நூல்கள்

| | |
|---|---|
| கொடியா கொம்பா? (மூன்றும் பதிப்பு) | 0-30 |
| திருவாசகத் தேன் | 0-25 |
| குறள் வாழ்வு | 0-50 |
| ஈழத்தில் அருள்நெறித் தந்தை<br>தொகுத்தவர் ஈழத்துச் சிவானந்தம் | 0-75 |

அருள்நெறிப் பண்ணை, குன்றக்குடி
(இராமநாதபுரம் மாவட்டம்)

## அடிகளார் சுற்றுப்பயணம்

ஏப்ரல், 1964.

19 பனைக்குளம்
20 ஆனந்தூர்
21 திருக்கண்ணபுரம்
அம்மையபுரம்
நீடாமங்கலம்
22 சடையன்பட்டி
வாராப்பூர்

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி.
இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.